بسم الله الرحمن الرحيم

# ஹிஜாப்

## (பர்தா)

## முஸ்லிம் மங்கையரின் மேன்மை


தொகுப்பு:

உமர் ஷரீஃப் இப்னு அப்துஸ் ஸலாம்

அலீ இப்னு அப்துல்லாஹ்

## தொகுக்க உதவிய நூல்கள்:

**1. ஷக்ஸிய்யத்துல் மர்அத்தில் முஸ்லிமா**

*(முன்மாதிரி முஸ்லிம் பெண்மணி)*

*அஷ்ஷைக் முஹம்மது அலீ அல்ஹாஷிமி.*

**2. ஹிஜாப் - அதன் அவசியம் என்ன?**

*அஷ்ஷைக் முஹம்மது இப்னு இஸ்மாயீல்*

**3. இல்லங்களை அச்சுறுத்தும் அபாயங்கள்**

*அஷ்ஷைக்*

*முஹம்மது இப்னு ஸாலிஹ் அல்முநஜ்ஜித்*

# பொருளடக்கம்

# பதிப்புரை

*அளவற்ற அருளாளனும் நிகரற்ற*
*அன்புடையோனுமாகிய அல்லாஹ்வின் பெயரால்...*

அல்லாஹ்விற்கே எல்லாப் புகழும்! ஸலவாத்தும் ஸலாமும் அவனுடைய தூதர் முஹம்மது (ஸல்) அவர்கள் மீதும் அவர்களின் குடும்பத்தார் மற்றும் தோழர்கள் மீதும் உண்டாகட்டும்!

பெண்கள் இச்சமூகத்தின் கண்கள், இச்சமூகத்தின் மிக முக்கிய உறுப்பினர்கள். அவர்கள் சீர்பெற்றவர்களாக, இறையச்சமுள்ளவர்களாக, நேரிய சிந்தனை உடையவர்களாக இருந்தால்தான் ஒரு முழு இஸ்லாமிய சமுதாயத்தை உருவாக்க முடியும். இச்சமுதாயத்தை நல்வழியில் நடத்திச் செல்வதில் பெண்களுக்குப் பெரும் பங்குண்டு.

அன்னை ஹாஜர் (அலை) அவர்களிடம் வளர்ந்த இஸ்மாயீல் (அலை) சிறுவய திலேயே அல்லாஹ்விற்காகத் தன் உயிரை அர்ப்பணிக்கத் தயாரானார்.

நூஹ் நபி (அலை) அவர்களின் முஸ்லிம் அல்லாத மனைவிக்குப் பிறந்த அவர்களின் மகன் கெட்டவராக வளர்ந்து வெள்ளப் பிரளயத்தில் அழிந்தார்.

மர்யம் மற்றும் ஃபிர்அவ்னின் மனைவி ஆகிய இரு பெண்களை இறைநம்பிக்கை யாளர்களுக்கு முன்னுதாரணமாக அல்லாஹ் கூறுகிறான்.

இறைமறுப்பாளர்களுக்கு உதாரணமாக இரு நபிமார்கள் நூஹ் மற்றும் லூத் (அலை) அவர்களின் மனைவிகளை அல்லாஹ் குறிப்பிடுகிறான்.

மேற்கூறப்பட்ட செய்திகள் இச்சமுதாயச் சீர்திருத்தத்தில் பெண்களுக்குள்ள அரும்பங்கைத் தெளிவுபடுத்துகின்றன.

இன்று அந்நியர்கள் முஸ்லிம் சமுதாயத்தைக் கெடுப்பதற்குப் பெண்களைத்தான் ஆயுதமாகப் பயன்படுத்துகின்றனர். பெண் களைக் கெடுத்தால் முழு சமுதாயத்தையும் கெடுத்துவிடலாம் என்று அவர்கள் அறிந்து வைத்திருக்கின்றனர்.

குறிப்பாக, இஸ்லாமியப் பெண்களுக்குப் பாதுகாப்பை அளிக்கின்ற ஹிஜாபை, அவர்களை விட்டுக் கழற்றி விட்டால் மற்ற தீமைகளில் சுலபமாக அவர்களைச் சிக்க வைத்து விடலாம். எனவே, அதை இலக்காக வைத்துச் செயல்பட்டு வருகின்றனர்.

ஆகவே, முஸ்லிம் பெண்களை ஹிஜாப்

அணிய ஆர்வமூட்டும் வகையில் இச்சிற்றேடு தொகுக்கப்பட்டுள்ளது.

படித்துச் செயல்படுங்கள். பிறருக்கும் கொடுத்து படிக்கத் தூண்டுங்கள்.

அல்லாஹ்வே! எங்களின் இந்த நூலையும் மற்ற நூல்களையும் நீ ஏற்றுக் கொள்வாயாக! உனக்கே எல்லாப் புகழும்!

**உமர் ஷரீஃப் இப்னு அப்துஸ்ஸலாம்,**
குர்ஆன், சுன்னா பணியாளன்,
தாருல் ஹுதா, சென்னை-1.

*அளவற்ற அருளாளனும் நிகரற்ற அன்புடை யோனுமாகிய அல்லாஹ்வின் பெயரால்...*

அன்புச் சகோதரியே! அல்லாஹ் உனக்கு அருள் புரிவானாக! இந்தச் சிறு நூலின் ஒவ்வொரு வாசகமும் உனது இவ்வுலக வாழ்வையும் மறுமை வாழ்வையும் கண்ணியப்படுத்தவே எழுதப்படுகிறது. இங்குச் சொல்லப்படுகிற அனைத்தும், அல்லாஹ்வும் அவனுடைய தூதரும் உனக்குக் கட்டளையிட்ட நல்லொழுக் கங்களின் அடிப்படையின் மீது அமைந்த வையாகும். இவற்றைப் படித்து உடனடியாகப் பின்பற்று! அல்லாஹ்வின் அன்பிலும் அருளிலும் திளைத்திடு! அல்லாஹ் உனக்கும் எங்களுக்கும் நேர்வழி காட்டுவானாக!

# ஹிஜாப் - ஒரு விளக்கம்

ஒரு நல்ல முஸ்லிம் பெண்மணி தன் வீட்டைவிட்டு வெளியே செல்லும்போது மார்க்கம் அவளுக்குக் கட்டளை இட்டுள்ள ஆடை ஒழுக்கங்களைக் கடைப்பிடிக்க வேண்டும். அதைத்தான் ஹிஜாப், பர்தா என்று கூறப்படுகிறது. ஒரு பெண் இந்த ஒழுங்கைக் கடைப்பிடிக்காமல் வீட்டை விட்டு வெளியேறக் கூடாது; அந்நிய ஆண்களுக்கு முன் நிற்கக் கூடாது. இது அல்லாஹ்வினால் திட்டவட்டமாக தடை செய்யப்பட்டதாகும்.

*அல்லாஹ் கூறுகிறான்:*

*(நபியே!) அல்லாஹ்வை நம்பிக்கை கொண்ட பெண்களுக்கு நீர் கூறும்: அவர்களும் தங்கள் பார்வைகளைக் கீழ்நோக்கியே வைக்க வேண்டும்; தங்கள் கற்புகளையும்*

பாதுகாத்துக் கொள்ள வேண்டும். அத்துடன், தங்கள் அலங்காரங்களில் வெளியில் இருக்கக் கூடியவற்றைத் தவிர மற்றதை வெளிகாட்ட வேண்டாம். தங்கள் துப்பட்டாக்களை தங்கள் மேலாடைகளின் மீது போட்டு (தலை, முகம், கழுத்து, நெஞ்சு ஆகியவற்றை மறைத்து)க் கொள்ள வேண்டும்.

பெண்கள்...

1. தங்கள் கணவன்,

2. தங்கள் தந்தை,

3. தங்கள் கணவனின் தந்தை (மாமனார்),

4. தங்கள் பிள்ளைகள்,

5. தங்கள் கணவனின் (மற்ற மனைவிகளுக்குப் பிறந்த) பிள்ளைகள்,

6. தங்கள் (சொந்த அண்ணன், தம்பிகளாகிய) சகோதரர்கள்,

7. தங்கள் சகோதரர்களின் பிள்ளைகள்,

8. தங்கள் சகோதரிகளின் பிள்ளைகள்,

9. தங்கள் சமுதாயத்தைச் சேர்ந்த முஸ்லிம் பெண்கள்,

10. தங்கள் அடிமைகள்,

11. (பெண்கள் மீது மோகமற்ற) தங்களை அண்டி வாழ்கிற ஆண்கள்,

12. பெண்களின் மறைவான அவயங்களை அறிந்துகொள்ளாத சிறுபருவத்தையுடைய (ஆண்) குழந்தைகள் ஆகிய இவர்களைத் தவிர மற்ற எவர் முன்பும் தங்கள் அலங்காரத்தை அறவே வெளிப்படுத்த வேண்டாம். மேலும், (தாங்கள் அணிந்துள்ள கால் கொலுசுகள், வளையல்கள் போன்ற) மறைந்திருக்கக்கூடிய தங்கள் (ஆடை ஆபரண) அலங்காரத்தை அறிவிக்கின்ற

*நோக்கத்துடன் தங்கள் கால்களை (பூமியில்) தட்டித் தட்டி நடக்க வேண்டாம். அல்லாஹ்வை நம்பிக்கை கொண்டவர்களே! (இதில் எந்த விசயத்திலேனும் உங்களால் தவறு ஏற்பட்டு விட்டால்) நீங்கள் வெற்றி பெறும் பொருட்டு அல்லாஹ்வின் பக்கமே பாவ மன்னிப்புக் கோருங்கள்.*

*(சூரா அந்நூர் 24:31)*

## அரைகுறை ஆடை – ஓர் ஒழுக்கக்கேடு

அல்லாஹ்வுடைய சட்டதிட்டங்களை விட்டும், அவனுக்குக் கீழ்ப்படிவதை விட்டும் விலகி நிற்கின்ற மாற்று மதச் சமுதாயங்களில் இன்று பல பெண்கள் அரைகுறை ஆடையுடன் ஆபாசமாகச் சுற்றித் திரிகின்றனர். இன்னும் பலர், அந்நியர்கள் பார்த்து இரசிக்கும்படி அலங்காரமான ஆடைகளை அணிந்து

வெளியே வருகிறார்கள். அப்படிப்பட்ட பெண்களில் ஒருத்தியாக முஸ்லிம் பெண்மணி எத்தருணத்திலும் இருக்கக் கூடாது.

அல்லாஹ்வின் தூதர் (ஸல்லல்லாஹு அலைஹி வஸல்லம்) கூறினார்கள்: இரண்டு கூட்டத்தினர் நரகவாசிகளில் உள்ளவர்கள். அந்த இரண்டு கூட்டத்தினரையும் நான் பார்த்ததில்லை. முதல் கூட்டத்தினர், பசு மாட்டின் வாலைப் போன்ற (நீண்ட) சாட்டைகளைத் தம்மிடம் வைத்துக் கொண்டு மக்களை அடி(த்து இம்சி)ப்பார்கள். மற்றொரு கூட்டத்தினர் (தாம்) ஆடை அணிந்திருந்தும் நிர்வாணமாகக் காட்சி அளித்த பெண்கள். அவர்கள் பிறரைத் தம் பக்கம் சாய்த்து, தாமும் பிறர் பக்கம் சாய்ந்தவர்கள். அவர்களுடைய தலை(யிலுள்ள கூந்தல் அலங்காரம்), கழுத்து நீண்ட ஒட்டகங்களின்

(இரு பக்கம்) சாயக்கூடிய திமில்களைப் போன்றிருக்கும். அவர்கள் சொர்க்கத்தில் நுழைய மாட்டார்கள்; (ஏன்) சொர்க்கத்தின் வாடையைக்கூட நுகர மாட்டார்கள். சொர்க்கத்தின் நறுமணமோ இவ்வளவு இவ்வளவு தொலைவிலிருந்தே வீசிக் கொண்டிருக்கும். (ஸஹீஹ் முஸ்லிம்-4316)

## ஷைத்தானின் வழிகேடு

ஒரு பெண் தன் அலங்காரங்களை அந்நியருக்குக் காட்டுவது ஷைத்தானின் வழிகேடாகும். பெண் தனது ஆடை அலங் காரங்களைக் வெளிக் காட்டித் திரிவதால் ஏராளமான தீமைகள் ஏற்படுகின்றன. சமுதாயத்தில் ஒழுக்கச் சீர்குலைவுகள் உண்டாகின்றன. ஷைத்தான் இப்படிப்பட்ட பெண்களைக் கொண்டு பல மானக் கேடான செயல்களைத் தூண்டிவிடுகிறான்.

ஆணுக்கும் பெண்ணுக்கும் இடையே தகாத உறவுகளையும் கள்ளத்தனமாக தொடர்புகளையும் ஏற்படுத்துகிறான்.

*அல்லாஹ் கூறுகிறான்: "நீங்கள் தீமைகள் மற்றும் மானக் கேடானவற்றைச் செய்வதற்கும், நீங்கள் அறியாதவற்றை அல்லாஹ்வின் மீது (பொய்யாகக்) கூறுவதற்குமே ஷைத்தான் உங்களைத் தூண்டுகிறான்." (அல்குர்ஆன் 2:268)*

ஆடை அலங்காரங்களை வெளிப்படுத்திக் கொண்டு செல்கிற பெண்களைப் பற்றி நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: ஒரு பெண் (நடந்து வந்தால்) ஷைத்தான் (தூண்டி விடும்) கோலத்திலேயே எதிர் நோக்கி வருகிறாள்; ஷைத்தான் (தூண்டி விடும்) கோலத்திலேயே திரும்பிச் செல்கிறாள்.

(ஸஹீஹ் முஸ்லிம் - 2718)

மேலும் கூறினார்கள்:
எனது மரணத்திற்குப் பின் ஆண்களுக்கு மிகவும் தீங்கை ஏற்படுத்தக்கூடிய குழப்பம், பெண்களைவிட வேறொன்றுமில்லை.
(ஸஹீஹுல் புகாரீ - 5096)

இன்னும் கூறினார்கள்:
இவ்வுலகின் குழப்பத்தை விட்டு உங்களைப் பாதுகாத்துக் கொள்ளுங்கள்; பெண்களின் குழப்பத்தை விட்டும் உங்களைப் பாதுகாத்துக் கொள்ளுங்கள். ஏனெனில், இஸ்ரவேலர்களிடையே ஏற்பட்ட முதல் குழப்பம் பெண்களால்தான் ஏற்பட்டது.
(ஸஹீஹ் முஸ்லிம் - 5292)

இப்படிப்பட்ட பெண்களில் ஒருத்தியாக முஸ்லிம் பெண் இருக்கக் கூடாதென அல்லாஹ் கட்டளையிடுகிறான்:

*நீங்கள் உங்கள் (வீடுகளுக்கு வெளியில்*

*சுற்றித் திரியாது) வீடுகளுக்குள்ளாகவே தங்கி இருங்கள். முன்னிருந்த அறியாத மக்கள் (தங்களை அலங்கரித்துக் கொண்டு வெளியில் சுற்றித்) திரிந்து கொண்டிருந்ததைப்போல் நீங்களும் திரியாதீர்கள். தொழுகையைக் கடைப் பிடி யுங்கள்; ஸகாத்தும் கொடுத்து வாருங்கள். அல்லாஹ்வுக்கும் அவனுடைய தூதருக்கும் கட்டுப்பட்டு நடங்கள்.*

*(அல்குர்ஆன் 33:33)*

## அல்லாஹ்வின் கட்டளை

பர்தாவை அல்லாஹ்வின் கட்டளைக்காக அணிய வேண்டும். நல்ல முஸ்லிம் பெண்மணி பர்தாவைச் சடங்காகவோ, சம்பிரதாயமாகவோ கடைப்பிடிக்கக் கூடாது. தனது முன்னோர்களின் கலாசார ஆடை என்றும் நினைக்கக் கூடாது. மாறாக, பர்தா அணிகின்ற சட்டத்தை அல்லாஹ்வின்

கட்டளை என்ற நம்பிக்கையுடனும் மனப் பூர்வமான விருப்பத்துடனுமே பேண வேண்டும். குழப்பங்கள் நிறைந்த இடங்களை விட்டும், இழிவான சூழ்நிலைகளை விட்டும், வழிகேட்டின் அபாயங்களை விட்டும் தன்னைப் பாதுகாக்கவே தனக்கு அல்லாஹ் இப்படிப்பட்ட கட்டளையை விதித்துள்ளான் என்றும், தனது தனித் தன்மையை இதன் மூலம் பிரித்துக் காட்டுகிறான் என்றும் முழுதிருப்தியுடன் முஸ்லிம் பெண் ஏற்று நடக்க வேண்டும்.

அல்லாஹ் இச்சட்டத்தை இறக்கியபோது முஹாஜிர்[1] மற்றும் அன்ஸாரிப் பெண்கள்[2] அப்படித்தான் ஏற்றுக் கொண்டார்கள்.

*1) முஹாஜிர் - இஸ்லாமிற்காக மக்காவைத் துறந்து மதீனா வந்தவர்.*

*2) அன்ஸாரி - முஹாஜிர்களை ஆதரித்து உதவி செய்த மதீனாவாசி.*

அன்னை ஆயிஷா (ரழி) அறிவிக்கிறார்கள்: முந்தி வாழ்ந்த முஹாஜிர் பெண்களுக்கு அல்லாஹ் கருணை காட்டட்டும். தங்கள் துப்பட்டாக்களை (புர்காக்களை)த் தங்கள் மேலாடைகளின் மீது போட்டு (தலை, முகம், கழுத்து, நெஞ்சு ஆகியவற்றை மறைத்து)க் கொள்ள வேண்டும் என்ற வசனத்தை அல்லாஹ் இறக்கியபோது தங்களின் போர்வைகளைக் கிழித்துத் தங்க(ள் முகங்க)ளை மூடிக் கொண்டார்கள்.

(ஸஹீஹுல் புகாரி - 4758)

ஸஃபிய்யா பின்த் ஷைபா (ரஹ்) அறிவிக்கிறார்கள்: நாங்கள் ஆயிஷா (ரழி) அவர்களிடம் அமர்ந்து குறைஷி வமிசப் பெண்களைப் பற்றியும் அவர்களின் சிறப்பைப் பற்றியும் உயர்வாகப் பேசினோம். அதற்கு ஆயிஷா (ரழி) கூறினார்கள்: ஆம்!

நிச்சயமாக குறைஷிப் பெண்களுக்குச் சிறப்பு இருக்கத்தான் செய்கிறது. அல்லாஹ்வின் மீது சத்தியமாக! அன்ஸாரிப் பெண்களைவிடச் சிறந்தவர்களையோ, அல்லாஹ்வின் வேதத்தை அதிகம் உண்மைப்படுத்துபவர்களையோ, அந்த வேதத்தை நம்பிக்கை கொள்பவர்களையோ நான் பார்த்ததில்லை. சூரா நூர் இறக்கப் பட்டது. அதில் தங்கள் துப்பட்டாக்களைத் தங்கள் மேலாடைகளின் மீது போட்டு (தலை, முகம், கழுத்து, நெஞ்சு ஆகியவற்றை மறை த்து)க் கொள்ள வேண்டும் என்ற வசனம் இறக்கப்பட்டது. அன்ஸாரி ஆண்கள் தங்கள் பெண்களுக்கு அந்த வசனத்தை ஓதிக்காட்டினார்கள். ஒவ்வோர் ஆணும் தனது மனைவி, மகள், சகோதரி, உறவுப் பெண்கள் என அனைவரிடமும் சென்று அதை ஓதிக்காட்டினார். உடனடியாக

அனைத்துப் பெண்களும் தங்கள் போர்வை களை எடுத்துப் போர்த்திக் கொண்டார்கள். அல்லாஹ் தன் வேதத்தில் இறக்கிய சட்டத்தை உண்மைப்படுத்தும் விதமாக இப்படிச் செய்தார்கள். மறுநாள் காலையில் நபி (ஸல்) அவர்களுக்குப் பின் சுப்ஹு தொழுகையில் போர்வை போர்த்திக் கொண்டு வந்தார்கள். அவர்களுடைய தலைகளில் காகங்கள் இருப்பதைப் போன்று இருந்தது. (ஃபத்ஹுல் பாரீ)

அல்லாஹ் அந்த முஹாஜிர் மற்றும் அன்ஸாரிப் பெண்கள் மீது கருணை காட்டுவானாக! அல்லாஹ்வின் மீது அவர் கள் வைத்திருந்த நம்பிக்கை எவ்வளவு உறுதியானது! அவர்களின் இஸ்லாமியப் பற்று எவ்வளவு உண்மையானது! அல்லாஹ்வின் சட்டம் இறக்கப்பட்ட

போது அதை எவ்வளவு அழகுடன் ஏற்றுக் கொண்டார்கள்! உண்மையான நம்பிக்கையுடன் அல்லாஹ்வையும் அவன் தூதரையும் நம்பிக்கை கொள்கிற ஒவ்வொரு முஸ்லிம் பெண்ணும் சிறப்பிற்குரிய அந்தப் பெண்களையே பின்பற்ற வேண்டும். அவர்களின் தனித்தன்மை மிக்க அந்த இஸ்லாமிய ஆடையைத் தானும் அவசியம் அணிய வேண்டும். தன்னைச் சுற்றி ஒழுக்கமின்றி அரைகுறை ஆடையுடன் அலைகிற பெண்களுடைய ஷைத்தானியக் கலாசாரத்தை அவள் சிறிதும் பின்பற்றக் கூடாது.

இன்றும் அன்ஸாரிப் பெண்களைப் போன்று பர்தாவைப் பேணுகிற முஸ்லிம் பெண்கள் அதிகமாகத்தான் இருக்கிறார்கள். (அல்ஹம்து லில்லாஹ்!) இப்படிப்பட்ட தூய்மையான முஸ்லிம்

பெண்களைக் கொண்டுதான் இஸ்லாமிய வீடுகள் ஒளிமயமாகின்றன. இஸ்லாமியச் செயல் வீரர்கள் உருவாக்கப்படுகிறார்கள்.

## தீய பிரசாரம்

முஸ்லிம் அல்லாதவர்களின் தீய பிரசாரத்தில் முஸ்லிம் பெண்மணி ஏமாந்து விடக்கூடாது. இன்று உலகம் முழுவதும் இருக்கின்ற பிற மதத்தவர்கள் பெண்ணின் விசயத்தில் கடைப்பிடிக்கிற ஒழுங்கீனம், ஆடைக் குறைப்பு, அரை அல்லது முழு நிர்வாணப் போக்கு, அவர்கள் நேர்வழியை விட்டும், நேரிய சிந்தனையை விட்டும், தூய வாழ்க்கையை விட்டும், ஒழுக்க நெறிகளை விட்டும் முற்றிலும் தடம் புரண்டு விட்டார்கள் என்பதற்கு உறுதியான ஆதாரமாகும்.

பெண்களை அரை அல்லது முழு நிர்வாணமாக்கி, தங்கள் இச்சையைத்

தணிக்க வேண்டுமென்றே மாற்றார்கள் அனைவரும் விரும்புகின்றார்கள். முஸ்லிம் பெண்கள் இவர்களின் தீய பிரசாரத்தில் ஏமாந்து தங்கள் இஸ்லாமியத் தனித் தன்மையைத் தொலைத்து விடக்கூடாது.

முஸ்லிம் பெண்கள் இஸ்லாமியப் பர்தாவைக் களைந்துவிட்டு ஆண்களுடன் தங்கு தடையின்றி பழக வேண்டுமென பலர் ஊளையிடுகிறார்கள். தங்களின் பெண்கள் கற்பையும் மானத்தையும் பெண்மையையும் இழந்தது போன்று முஸ்லிம் பெண்களும் இழக்க வேண்டுமென விரும்புகிறார்கள்.

இதில் ஆச்சரியம் என்னவென்றால், தங்களை முஸ்லிம் என்று சொல்லிக் கொள்கின்ற படித்த மேல்தட்டு (?) மக்களில் பலரும் பர்தாவை விமர்சிக்கிறார்கள். ஆனால்,

அவர்களில் சிலர் இதன் விபரீதத்தை உணர்ந்தபோது மனம் திருந்தியுள்ளனர்.

இதோ..! டாக்டர். நவால் ஸஅதாவி என்ற அரபிய முஸ்லிம் பெண் பர்தாவையும் பர்தா அணிந்த பெண்களையும் பல காலமாகக் கடுமையாக விமர்சித்து வந்தார். ஆனால், இன்று அவர் மனம் திருந்தி, மேற்கத்திய பெண்களின் கேவலமான தன்மையையும் அரை நிர்வாணத்தையும் எதிர்த்து வருகிறார்.

அவர் கூறுவதைக் கேளுங்கள்: நான் இலண்டன் நகர வீதிகளில் பார்த்த காட்சி அது. பெண்களில் பலர் தங்கள் உடல்களை விலை பொருட்களைப்போல விலை பேசிக் கொண்டிருந்தார்கள். நிர்வாணிகளைப் போன்றே அவர்கள் இருந்தார்கள். குளிரையும் வெப்பத்தையும் விட்டுப் பாதுகாத்துக்

கொள்ளத்தான் ஆடை அணிகிறார்களே தவிர மானத்தைப் பாதுகாப்பதற்காக இல்லை. தான் ஒரு வியாபாரப் பொருள் அல்ல, தான் ஒரு மானமுள்ள மனித இனத்தைச் சேர்ந்தவர்கள் என்று தன்னைக் கருதக்கூடிய எந்தப் பெண்ணும் தனக்கு நிர்வாணத்தையோ அல்லது அரை நிர்வாணத்தையோ ஒருபோதும் விரும்ப மாட்டாள். (அல்முஜ்தமஃ மலர் எண்: 931)

பர்தா அறிவை விட்டுத்தான் களையப்பட வேண்டுமே தவிர உடலை விட்டு அல்ல. பர்தா அணிந்த எத்தனையோ பெண்கள் பர்தா அணியாத மேற்கத்திய கல்வி படித்த பல பெண்களைவிட நல்ல தெளிவான, தீர்க்கமான அறிவைப் பெற்றிருக்கிறார்கள். மேற்கத்தியக் கலாசாரத்தைப் பின்பற்றுகிற பெண்களின் முகம், தலை, உடல்

திறந்துள்ளன; ஆனால் அறிவும், சிந்தனை யும் திரையிடப் பட்டுள்ளன.

## பர்தாவின் இன்றைய நிலைமை

இன்று பர்தா அணிகின்ற பெண்களில் பலருக்கு அது பற்றிய சட்டங்கள் தெரியாததால் தாங்கள் விரும்பிய மாதிரி யெல்லாம் பர்தாக்களை அணிகிறார்கள். அதிகமானவர்கள் தங்கள் பர்தாக்களில் அலங்காரமான (Embroidery) பூ வேலைப் பாடுகளைச் செய்துகொள்கிறார்கள். அவை பார்ப்பவர்களின் கண்களைக் கவர்கின்றன. இன்னும் பலர், பர்தாவின் ஓரங்களைக் கிழித்து, அவற்றை நாடாக்களால் முடிச் சிட்டு, உள்ளே அணிந்துள்ள ஆடைகள் வெளியே தெரியும்படி அணிகிறார்கள். இப்படிப்பட்டவர்கள் தாங்கள் பர்தாவே அணியவில்லை என்பதை முதலில் அறிய வேண்டும்.

இன்னும் பலர், ஸ்கார்ஃப் மட்டும் தலையில் கட்டிக்கொண்டு தங்கள் பொதுவான சேலைகள் மற்றும் சுடிதார் ஆடைகளுடனே யே வெளியே வருகிறார்கள். இவர்களும் பர்தா அணிந்தவர்களாக மாட்டார்கள். சிலர் வீட்டிலிருந்து புறப்படும் போது பர்தா அணிகிறார்கள். பிறகு சிறிது சிறிதாக வழியில் தலை முக்காடு கழன்று விடுகிறது. தலையும் கழுத்துப்பகுதியும் நெஞ்சுப் பகுதியும் திறந்த நிலையிலேயே பின்னர் வீதியில் செல்கிறார்கள்.

பலர் நெக்லஸ், வளையல்கள் போன்ற நகைகளை வாங்குவதற்காகக் கடை களுக்குச் செல்லும்போது அங்குள்ள கடை ஊழியர்களிடம் மிகச் சாதாரணமாகவும், இயல்பாகவும் பேசிக்கொண்டு, அவர்கள் முன் பர்தாவை விலக்கிவிட்டு நகைகளை

அணிந்துப் பார்க்கிறார்கள். கடையிலுள்ள ஆண்கள் அந்நியர்கள்தான் என்ற நினைவே இல்லாதபடி சொந்தச் சகோதரர் களிடம் சிரித்துப் பேசி விளையாடுவதைப் போல அவர்களிடம் நடந்து கொள்கிறார்கள். கடை ஊழியனிடம் தங்கள் கைகளைக் கொடுத்து வளையல்கள் அணிந்து கொள்கி றார்கள்; அவனிடம் தங்கள் கழுத்தைக் காட்டி நெக்லஸ்களை அணிந்துவிடச் சொல்கிறார்கள்; கால்களைத் திறந்து காட்டிக் கொலுசை மாட்டிவிடச் சொல்கிறார்கள். மானங்கெட்ட இந்தச் செயலைப் பற்றி எந்த அருவருப்பும் கொள்வதில்லை. நகைக் கடைகள் என்றில்லாமல் மளிகைக் கடைகள், காய்கறிக்கடைகள், பால்கடைகள், இறைச்சிக் கடைகள் போன்ற இடங்களிலும் அங்குள்ள ஊழியர்களிடம் குழைந்து பேசிக் கொண்டிருக்கிறார்கள். எவ்வித வெட்க

உணர்வின்றி முகம், கழுத்து, கை திறந்த நிலையில் அவர்களிடம் பழகுகிறார்கள்.

கிராமங்களில் உள்ள பெண்கள் தங்கள் ஊரிலுள்ள கடைக்காரர்களிடமும், நகரத்துப் பெண்கள் தங்கள் தெருக்களிலுள்ள கடைக்காரர்களிடமும் அன்றாடம் சென்று தேவைப்படுகிற பொருட்களை வாங்கி வருகிற பழக்கம் உடையவர்களாக இருக்கிறார்கள். இச்சமயங்களில் அப்பெண்கள் அந்தக் கடைக்காரர்களை ஆண்களாகக்கூட நினைப்பதில்லை. அந்தஅளவு அவர்களுடன் நெருங்கிப் பழகுகிறார்கள். பலர் அவர்களிடம் பர்தாவைப் பேணுவதை அவசியமாகக் கருதுவதே இல்லை.

அதிலும், வசதிமிக்க வீட்டாரின் பெண்கள் தங்கள் கார் ஓட்டுநர்களைத் தங்களின்

சொந்தச் சகோதரர்களைப் போல் பாவித்து அவர்களுடன் ஷாப்பிங் போகிறார்கள்; அவர்களிடம் சிரித்துப் பேசி விளையாடுகிறார்கள்; காரில் அவர்களுக்கு அருகிலேயே உட்கார்ந்து செல்கிறார்கள்; கணவனை மதிப்பதைப் போல் அவர்களை மதிக்கிறார்கள்; சகோதரனிடம் பழகுவதைப்போல் அவர்களிடம் பழகுகிறார்கள். இது இறுதியில் தகாத எண்ணங்களையும் மானக்கேடான செயல்களையும் தூண்டி விடுகிறது. நல்ல குடும்பங்களையும் சீர்குலைத்து விடுகிறது.

இன்னும் சில இடங்களில் சிறுமிகளைப் பள்ளிக் கூடங்களுக்கு அழைத்துச் சென்று விடுவதற்கும் அழைத்து வருவதற்கும் வாலிபர்களை வேலைக்கு நியமிக்கிறார்கள். அச்சிறுமிகளோ வயது வந்த பிறகும் அந்தப் பணியாட்களுடன் முன்னர்

பழகியதைப் போன்றே பழகுகிறார்கள். இதனால் நாளடைவில் பல விரும்பத்தகாத சம்பவங்கள் நிகழ்ந்து விடுகின்றன.

இந்த விபரீதங்களுக்கு அடிப்படைக் காரணம், முறையான பர்தாவைப் பற்றிய தெளிவான அறிவையும், அது சார்ந்த ஒழுக்கங்களையும் அறியாமல் இருப்பதே ஆகும். அந்த நிபந்தனைகளாவன:

## முறையான பர்தாவுக்குரிய நிபந்தனைகள்

**1. பர்தா, முகம் உட்பட முழு உடலையும் மறைக்க வேண்டும்.**

தலை முதல் கால்கள் வரையுள்ள உடல் உறுப்புகள் அனைத்தையும் முழுமையாக மறைக்க வேண்டும். இன்று பலர் தங்கள் முகம், கூந்தல், கழுத்துப் பகுதி, கணுக்கால்

பகுதி, அணிந்துள்ள ஆடை மற்றும் அதன் நிறங்கள் ஆகியன வெளியே தெரியும்படி பர்தா அணிகிறார்கள். இது தவறாகும்.

*அல்லாஹ் கூறுகிறான்:*

*தங்கள் துப்பட்டாக்களைத் தங்கள் மேலாடைகளின் மீது போட்டு (தலை, முகம், கழுத்து, நெஞ்சு ஆகியவற்றை மறைத் து)க்கொள்ள வேண்டும்.*

*(அல்குர்ஆன் 24:31)*

*ஒரு பெண் தன் உடலின் எல்லாப் பகுதி களையும் கட்டாயம் மறைக்க வேண்டும் என்பதைப் பற்றி நபி (ஸல்) இப்படிக் கூறி னார்கள்: "பெண்ணே அவ்றத்' (மறைத்து பேணப்பட வேண்டியவள்) ஆவாள்.*

*(ஜாமிவுத் திர்மிதீ - 1169)*

2. பர்தா, அலங்காரமின்றி இருக்க வேண்டும்.

*பெண்கள் தங்கள் (ஆடை, ஆபரணம் போன்ற) அலங்காரத்தை வெளியே காட்டாமல் மறைத்துக் கொள்ள வேண்டும்.*
*(அல்குர்ஆன் 24:31)*

*மேலும் கூறுகிறான்:*
*முன்னிருந்த அறியாத மக்கள் (தங்களை அலங்கரித்துக் கொண்டு வெளியில்) திரிந்து கொண்டிருந்ததைப்போல் நீங்களும் திரியாதீர்கள். (அல்குர்ஆன் 33:33)*

3. பர்தா, மெல்லியதாக இல்லாமல் மொத்தமாக இருக்க வேண்டும்.

பர்தாவிற்குப் பயன்படுத்தப்படுகிற துணி உள்ளே அணிந்துள்ள ஆடைகள் தெரியும்படி மெல்லியதாக இருக்கக் கூடாது. மாறாக, உள்ளே அணிந்துள்ள ஆடைகளை மறைக்கும்படி மொத்தமாக இருக்க வேண்டும்.

4. பர்தா, இறுக்கமாக இல்லாமல் பெரிதாகவும் விசாலமாகவும் இருக்க வேண்டும்.

பர்தா அணிவதின் அடிப்படை நோக்கமே, உடலின் அவயங்களையும் ஆடை அலங்காரங்களையும் முழுமையாக மறைத்து, அவற்றின் சுவடுகூட வெளியில் தெரியாமல் இருப்பதே! மெல்லிய துணிகளால் ஆன பர்தாக்களை அணிகிறபோதும், இறுக்கமான பர்தாவை அணிகிற போதும் இந்த நோக்கம் சிதைந்து விடுகிறது. அப்படிப்பட்ட பர்தாக்களை அணிந்த பெண்களுக்குக் கடுமையான வேதனை உண்டென நபி (ஸல்) எச்சரித்துள்ளார்கள்:

என் சமுதாயத்தின் பிந்திய காலத்தில் வருகிற பெண்கள் ஆடை அணிந்தும் நிர்வாணமாக இருப்பார்கள். அவர்களின்

தலைகள் மீது ஒட்டகங்களின் திமில் போன்றவை (சிகை அலங்காரமாக) இருக்கும். அவர்களைச் சபியுங்கள்; நிச்சயமாக அவர்கள் சபிக்கப்பட வேண்டியவர்களே!
(அல்முஃஜம் அஸ்ஸகீர்)

மேலும் கூறினார்கள்:
இரண்டு கூட்டத்தினர் நரகவாசிகளில் உள்ளவர்கள். அந்த இரண்டு கூட்டத்தின ரையும் நான் பார்த்ததில்லை. முதல் கூட்டத் தினர், பசு மாட்டின் வாலைப் போன்ற (நீண்ட) சாட்டைகளைத் தம்மிடம் வைத்துக் கொண்டு மக்களை அடி(த்து இம்சி)ப் பார்கள். மற்றொரு கூட்டத்தினர் ஆடை அணிந்திருந்தும் நிர்வாணமாகக் காட்சி தரும் பெண்கள். அவர்கள் பிறரைத் தம் பக்கம் சாய்ப்பவர்கள்; தாமும் பிறர் பக்கம் சாய்பவர்கள். அவர்களுடைய தலை(யிலுள்ள

கூந்தல் அலங்காரம்), கழுத்து நீண்ட ஒட்டகங்களின் (இரு பக்கம்) சாயக்கூடிய திமில்களைப் போன்றிருக்கும். அவர்கள் சொர்க்கத்தில் நுழைய மாட்டார்கள்; (ஏன்) சொர்க்கத்தின் வாடையைக்கூட நுகர மாட்டார்கள். சொர்க்கத்தின் நறுமணமோ இவ்வளவு இவ்வளவு தொலைவிலிருந்தே வீசிக் கொண்டிருக்கும்.

(ஸஹீஹ் முஸ்லிம் - 4316)

5. பர்தாவில் நறுமணம் பூசுவதைத் தவிர்க்க வேண்டும்.

நறுமணம் பூசிக்கொண்டும், கூந்தலில் பூக்களைச் சூடிக்கொண்டும் வெளியே செல்கிற பெண்களை நபி (ஸல்) இப்படிக் கண்டித்தார்கள்: எந்தப் பெண் நறுமணம் பூசிய நிலையில் அதை மக்கள் நுகர்கிறபடி அவர்களுக்கு மத்தியில் நடந்து

செல்கிறாளோ அவள் விபசாரியாவாள்.
(முஸ்னது அஹ்மது - 19338)

மேலும் கூறினார்கள்:
ஒரு பெண் நறுமணம் பூசி மஸ்ஜிதுக்குச் செல்வாளேயானால், அவள் பெருந்தொடக்குக்காக குளிப்பது போன்று குளிக்கும்வரை அவளின் தொழுகை ஒப்புக் கொள்ளப்படாது.
(முஸ்னது அஹ்மது - 9587)

**6. பர்தா, ஆண்களின் ஆடையை ஒத்திருக்கக் கூடாது**

பெண்களைப் போன்று ஆடை அணிகிற ஆண்களையும், ஆண்களைப் போன்று ஆடை அணிகிற பெண்களையும் அல்லாஹ்வின் தூதர் (ஸல்) சபித்தார்கள்.
(சுனன்அபூதாவூது - 4098)

**7. பர்தா, முஸ்லிம் அல்லாத பெண்களின் ஆடைகளை ஒத்திருக்கக் கூடாது**

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்: யார் பிற சமுதாயத்திற்கு ஒப்பாகின்றாரோ அவர் அவர்களைச் சேர்ந்தவரே!

(முஸ்னது அஹ்மது - 5107)

**8. பர்தாவைப் புகழுக்காக அணியக் கூடாது**

*அல்லாஹ் கூறுகிறான்:*

*பரிசுத்தமான வழிபாடு அல்லாஹ் ஒருவனுக்கே சொந்தமானது என்பதை அறிந்து கொள்ளுங்கள்.(அல்குர்ஆன் 39:3)*

நபி (ஸல்) எச்சரித்தார்கள்:

யார் உலக ஆசையை ஏற்படுத்தக்கூடிய ஆடையை அணிகிறாரோ, அவருக்கு அல்லாஹ் மறுமை நாளில் இழிவான ஆடையை அணிவிப்பான். பின்னர் அவர் நரக நெருப்பில் வீசப்படுவார்.

(சுனன் அபூதாவூது - 4028)

மேலும் எச்சரித்தார்கள்:

பிறர் புகழ்வதற்காக எவன் நற்செயல் செய்கிறானோ அவனை அல்லாஹ் தண்டிப்பான். பகட்டுக்காக எவன் நற்செயல் செய்கிறானோ அவனையும் அல்லாஹ் தண்டிப்பான்.

(ஸஹீஹ் முஸ்லிம் - 5709)

இந்த எட்டு நிபந்தனைகளும் நிறைவேறுகிற விதத்தில் பர்தா அணிந்தவர்களே அல்லாஹ்விடம் உண்மையில் பர்தா அணிந்த நல்ல முஸ்லிம் பெண்களாக ஏற்றுக்கொள்ளப் படுவார்கள். இவர்களுக்குத்தான் முழு மையான நற்கூலி கிடைக்கும். இவர்கள்தான் நரகத்தை விட்டும் தப்புவார்கள்.

## பர்தா அலட்சியம் செய்யப்படுகிற இடங்கள்

பர்தா அணிந்து வருகிற பெண்களில்

பலர், தாங்கள் அதை அணிந்த பிறகும் பல தவறுகளைச் செய்கிறார்கள். அணிகிறவரைதான் பர்தாவை நினைக் கிறார்கள். பிறகு முற்றிலும் மறந்து விடுகிறார்கள். தாங்கள் அணிந்துள்ள பர்தா காற்றில் பறந்து தங்களின் தலையும் முகமும் கூந்தலும் கழுத்தும் ஆடை அணிகலன்களும் வெளியே தெரிவதைக் கண்டுகொள்ளாது இருந்து விடுகிறார்கள். உடனடியாக அதைச் சரி செய்வதில்லை. இன்னும் பலர்,

*1. திருமண விருந்துகளிலும் உறவினர்களைச் சந்திக்கச் செல்கிற இடங்களிலும் தங்கள் "பர்தாவை மறந்து பேசிக்கொண்டிருக்கி றார்கள். தங்கள் உறவினர்களில் உள்ள மஹ்ரம் அல்லாத ஆண்களை அந்நியர்களாகக் கருதுவதே இல்லை.*

*2. கடற்கரைகள், பூங்காக்கள் போன்ற*

இடங்களிலும்,

3. குழந்தைகளைப் பள்ளிக்கூடத்திற்கு அழைத்துச் செல்கிற போதும், அழைத்து வருகிற போதும்,

4. வாகனங்களை ஓட்டிச் செல்கிற போதும், அவற்றின் பின்புறம் உட்கார்ந்து செல்கிற போதும்,

5. ஆட்டோ மற்றும் கார்களில் பயணிக்கிற போதும்,

6. அன்றாடம் பேருந்துகளில் செல்கிற போதும்,

7. கணவரின் தம்பி, அண்ணன், பெரிய தந்தை, சிறிய தந்தை மற்றும் அவர்களின் நண்பர்கள் ஆகியோருக்கு முன்னிலையிலும்,

8. பள்ளிக்கூடங்களில் ஆசிரியையாகவோ, தலைமை ஆசிரியையாகவோ, முதல் வராகவோ பதவி வகிக்கின்ற போதும்,

9. பள்ளிக்கூடங்களிலும் கல்லூரிகளிலும் மாணவர்களாகச் செல்கிற போதும்,

10. மருத்துவராகவோ, வியாபார நிறுவனங் களின் நடத்துனராகவோ, கம்ப்யூட்டர் கல்வி நிறுவனங்களிலும் தொழிற் சாலைகளிலும் வேலை செய்பவராகவோ இருக்கின்ற போதும்,

11. அரசியல் மேடைகளிலும், கவியரங்கு களிலும், விளையாட்டு அரங்குகளிலும்,

12. தெருக்களில் தண்ணீர் பிடிப்பதற்காக நிற்கிற போதும்,

13. வீட்டின் மாடிகளில் நிற்கிற போதும்,

14. உணவகங்களில் உணவு சாப்பிடுகிற போதும்,

15. (ரேஷன்) உணவுப் பொருள் பங்கீட்டுக் கடைகளில் பொருட்களை வாங்குவதற்காக நிற்கிற போதும்,

*16. மருத்துவமனைகளில் மருத்துவரைச் சந்திக்கக் காத்திருக்கிற போதும்,*

*17. சுற்றுலாப் பயணங்களிலும் சுற்றுலாத் தலங்களில் வேடிக்கை பார்க்கிற போதும்,*

*18. அண்டை வீடுகளில் எதையேனும் கொடுக்கவோ வாங்கவோ போகிற போதும், அந்த வீடுகளில் உட்கார்ந்து பேசிக்கொண்டிருக்கிற போதும்,*

*19. பல காலமாகப் பழகிய அண்டை வீடுகளில் அங்குள்ள ஆண் குழந்தைகள் வாலிப வயதை அடைந்த பிறகும்,*

இப்படிப் பல நேரங்களிலும் பல இடங்களிலும் தங்கள் பர்தாவை மறந்தபடி இருக்கிறார்கள். பர்தா அணிந்திருந்த போதிலும், அங்க அவயங்கள் வெளிப்படும்படி கவனக் குறைவாக இருந்து விடுகிறார்கள். இப்படி அலட்சியமாக இருப்பது, பர்தாவின்

அடிப்படை நோக்கத்தையே தகர்ப்பதாகும். முஸ்லிம் பெண்கள் இது விசயத்தில் எச்சரிக்கையாக இருந்து பர்தாவை முறைப் படிப் பேண வேண்டும்.

## அந்நியர்களிடம் பழகுவதையும், தனித்து இருப்பதையும் முற்றிலும் தவிர்க்க வேண்டும்

நம் பெண்களில் பலர் அந்நிய ஆண்களிடம் இயல்பாகப் பழகுவதையும், அவர்களுடன் தனித்து நின்று பேசிக்கொண்டிருப்பதையும் பார்க்க முடிகிறது. இது பல குழப்பங் களுக்கும் தீமைகளுக்கும் வழி வகுப்பதை அவர்கள் உணர்வதில்லை. தங்கள் பிள்ளைகள் பேருந்து நிலையங்களிலும் இரயில் நிலையங்களிலும் பள்ளிக் கூடங்களிலும் வேலைக்குச் செல்கிற

இடங்களிலும் மணிக்கணக்கில் அந்நியர்களிடம் அரட்டை அடித்துக் கொண்டிருப்பதை நன்கு தெரிந்திருந்தும் பெற்றோர்களில் பலர் அதைக் கண்டித்து அவர்களுக்கு அறிவுரை கூறுவதில்லை. பிரச்சினை வந்த பிறகு புலம்புகிறார்கள்; கதறுகிறார்கள்.

எந்த ஆணும் எந்தப் பெண்ணுடனும் அவளின் மஹ்ரமான உறவினர் இல்லாத நிலையில் தனிமையில் சந்திக்க வேண்டாம். பெண் தனது மஹ்ரமான உறவினர் இல்லாத நிலையில் பயணம் செய்ய வேண்டாம் என்று நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள். அப்போது ஒருவர் எழுந்து அல்லாஹ்வின் தூதரே! என் மனைவி ஹஜ்ஜு செய்யப் புறப்பட்டு விட்டாள். இன்னின்ன போரில் என் பெயர் பதிவு செய்யப்பட்டுள்ளது. (இந்நிலையில்) நான்

என்ன செய்வது? என்று கேட்டார். நபி (ஸல்), (போருக்குச் செல்வதிலிருந்து பெயரைத்) திரும்பப் பெற்றுக் கொண்டு, நீர் உமது மனைவியுடன் ஹஜ்ஜு செய்வீராக! என்று கூறினார்கள்.

(ஸஹீஹுல் புகாரீ - 3006)

*மஹ்ரம்' என்றால் திருமணம் செய்து கொள்வது நிரந்தரமாகத் தடை செய்யப் பட்ட உறவினராவார். உ.ம்: தந்தை, சகோதரர், தந்தையின் சகோதரர், தாயின் சகோதரர், மகன், மகனின் மகன் போன்று.*

*அந்நியர் என்றால் திருமணம் முடித்துக் கொள்வது ஆகுமான ஒவ்வோர் ஆடவரையும் குறிக்கும். அவர் உறவினராக இருந்தாலும் சரி! குறிப்பாக கணவனின் சகோதரர் போன்ற உறவினர்களை இங்குக் கவனத்தில் வைக்க வேண்டும். இவர்களுடன் தனிமையில் இருப்பது குற்றமாகும்.*

நபி (ஸல்) அவர்கள் கூறினார்கள்:
அந்நியப் பெண்களைச் சந்திப்பது குறித்து நான் உங்களுக்கு எச்சரிக்கை செய்கிறேன். அப்போது ஓர் அன்ஸாரித் தோழர் எழுந்து, அல்லாஹ்வின் தூதரே! கணவனின் உறவினர்கள் (சகோதரர்கள்) குறித்து என்ன சொல்கிறீர்கள்? என்று கேட்டார். அதற்கு நபி (ஸல்), கணவனின் உறவினர்கள், மரணம் என்று பதிலளித்தார்கள்.

(ஸஹீஹுல் புகாரீ - 5232)

கணவரின் சகோதரர் மற்றும் கணவரின் உறவினர்களை மரணம் என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) குறிப்பிட்டதன் காரணம், இவர்கள் வீட்டிற்குள் சென்று வருதல் எளிது என்பதால் இவர்கள் மூலம் தீமைகள் நடப்பது அதிகம். ஆகவேதான், அவர்கள் தனிமையில் வருவதைக்

கடுமையாக எச்சரிக்கும் விதமாக மரணம் என்று வருணிக்கப்பட்டது. மேலும், கணவரின் ஆண் உறவினர்களுடன் ஒரு பெண் தனிமையில் இருப்பது மரணத்தைப் போன்ற நாசத்திற்கு வழி வகுத்துவிடும். இறையச்ச முள்ள முஸ்லிம் பெண் இது போன்ற மார்க்கத்திற்கு முரணான செயல்களில் வீழ்ந்து விடமாட்டாள். மார்க்கத்தை மதிக்காத மக்கள்தான் இதுபோன்ற பாவங்களில் வீழ்ந்து கிடக்கிறார்கள். அல்லாஹ் நம்மைப் பாதுகாப்பானாக!

அன்புச் சகோதரியே! அல்லாஹ்வின் அன்பையும் மன்னிப்பையும் வேண்டி நிற்கின்ற உனக்கு இதுதான் நேரான வழி! இது வரை உனக்குச் சொல்லப்பட்ட அறிவுரைகள் அனைத்தும் உன்னை இவ்வுலகிலும் மறுமையிலும் மேன்மையாக்கி

வைக்கும். எனவே, இவற்றை நீ உடனடியாக நடைமுறைப்படுத்து! அல்லாஹ்வுக்குப் பயந்துகொள்! அவனுக்குக் கீழ்ப்படிந்த நல்லவர்களின் வழியில் செல்! அவர்கள் அல்லாஹ்வின் கட்டளையைக் கேட்டவுடன் என்ன கூறுவார்கள் என்பதை அல்லாஹ் கீழ்வருமாறு கூறிக் காட்டுகிறான்:

*(எங்கள் இறைவனே! உன் வசனங்களை) நாங்கள் கேள்விப்பட்டோம். (உன் கட்டளைகளுக்கு) நாங்கள் கட்டுப்பட்டோம். எங்கள் இறைவனே! நாங்கள் உனது மன்னிப்பைக் கோருகிறோம். உன்னிடம்தான் (நாங்கள்) சேர வேண்டியதிருக்கிறது' என்றும் கூறுகிறார்கள்.*

*(அல்குர்ஆன் 2:285)*

# தொலைப்பேசியும் அதனால் விளையும் ஆபத்துகளும்

புதிதாகக் கண்டுபிடிக்கப்பட்ட சாதனங்களில் தொலைப்பேசி பயன் நிறைந்ததும் தற்காலத்தின் அவசியத் தேவைகளில் ஒன்றுமாகும்.

தொலைப்பேசி நம் நேரங்களை மிச்சமாக்குகிறது; தூரத்தைச் சுருக்குகிறது; பல திசைகளில் தொடர்புகொள்ள வழி செய்கிறது; இதனை நன்மையானக் காரியங்களுக்குப் பயன்படுத்த வேண்டும். உதாரணமாக, தொழுகைக்கு எழுப்புதல், மார்க்கச் சட்டங்களைக் கேட்குதல், உறவினரைச் சேர்த்து வாழுதல், முஸ்லிம்களுக்கு நல்லுபதேசம் செய்தல்.

ஆனால், அதே சமயம் தொலைப்பேசியால் பெரிய விபரீதங்களும் தீமைகளும் நடந்து வருகின்றன. எத்தனையோ குடும்பங்கள்

இதனால் அழிந்து நாசமாகியுள்ளன. ஆண்களையும் பெண்களையும் இழிவான குணங்களில் இது தள்ளியிருக்கிறது. இதைப் பயன்படுத்துவது எளிதாக இருப்பதாலும், வீட்டிற்கு வெளியில் இருந்து கொண்டே நேரடியாக உள்ளே வருவதற்கு இது வழியாக இருப்பதாலும் இதில் அதிகமான ஆபத்துகள் மறைந்திருக்கின்றன.

## தொலைப்பேசியின் தீமைகள்

1. அச்சுறுத்துதல், 2. அன்னிய ஆணுடன் பெண்ணுக்குத் தொடர்பு ஏற்படுதல். பின்னர், அத்தொடர்பு வளர்ந்து மானக்கேடான காரியங்கள் நிகழ்ந்து விடுதல். 3. பொறாமைக் காரர்களும் கோள் சொல்பவர்களும் இவற்றைத் தவறாகப் பயன்படுத்துவதால் குடும்ப உறவுகளில் பாதிப்பு நிகழ்தல். 4. வீணான பேச்சுகளையும் பயனற்ற உரை யாடல்களையும் தொடர்வதால் நேரங்கள்

வீணாகுதல். அல்லாஹ்வை நினைவு கூர்வது மறக்கடிக்கப்படுதல். பெரும்பாலான பெண்கள் பொழுதுகளை வீணடிப்பதற்கே இதைப் பயன்படுத்துதல். இவ்வாறு பல தீமைகள் தொலைப்பேசியால் நிகழ்கின்றன.

## தொலைப்பேசியால் ஏற்படும் பிரச்சினைகளுக்கு தீர்வுகள்

1. வீட்டிற்கு உள்ளும் வீட்டிற்கு வெளியிலும் அதைத் தவறாகப் பயன்படுத்துபவர்களைக் கண்காணித்து அவர்களுக்கு அழகிய முறையில் அறிவுரை கூற வேண்டும்.

2. அறியாத ஒருவர் மூலமாக தொலைப் பேசியில் ஒரு செய்தி கிடைத்தால் அது உண்மையா என்பதை அல்லாஹ்வின் கட்டளைக்கேற்ப உறுதி செய்து கொள்ள வேண்டும்.

அல்லாஹ் கூறுகிறான்:

நம்பிக்கையாளர்களே! தீயவன் ஒருவன் உங்களிடம் ஒரு செய்தியைக் கொண்டு வந்தால், (அதன் உண்மையை அறியும் பொருட்டு அதனைத்) தீர்க்க விசாரனை செய்து கொள்ளுங்கள். (இல்லையெனில், அவனுடைய சொல்லை நம்பி) அறியாமை யால் சில மக்களுக்கு நீங்கள் தீங்கிழைத்து விட்டுப் பின்னர், நீங்கள் செய்தவற்றைப் பற்றி நீங்களே துக்கித்துக் கவலைப்படும்படியும் நேர்ந்துவிடும். (ஸூரா அல்ஹுஜுறாத் 49 : 6)

3. இஸ்லாமிய ஒழுக்கங்களைக் கற்றுக் கொடுக்க வேண்டும். இது மனிதனை எல்லா நேரத்திலும் சீர்படுத்தக் கூடியதாகும். இஸ்லாமிய ஒழுக்கங்களைப் பெற்றவர் தமக்குக் கண்காணிப்பாளரோ, பொறுப் பாளரோ இல்லையென்றாலும் தவறுகளை விட்டு தம்மைப் பாதுகாத்துக் கொள்வார்.

4. தொலைப்பேசியால் நன்மைகளைவிட

தீமைகளே மிகைத்திருக்குமாயின் முற்றிலும் அதன் இணைப்பைத் துண்டித்து விடுவதே நன்மையாகும்.